# திருப்புகழமிர்தம்





ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

சௌமிய சித்திரை

உ
முருகா

## நன்றியறிவிப்பு

எந்தை கந்தவேள் கருணையால் நமது திருப்புகழமிர்தத்துக்கு முப்பத்து மூன்று ஆண்டுகள் நிறைவடைந்து இந்தச் சித்திரை மாத இதழிலிருந்து முப்பத்துநான்காவது ஆண்டு தொடங்குகின்றது. சென்ற ஆண்டிலும் அதற்கு முன்னர் பல ஆண்டுகளாகவும் கைம்மாறு கருதாது பல அன்பர்களைச் சந்தாதாரர்களாகச் சேர்த்து உதவிய மெய்யன்பர்கள் பலருக்கும் எனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன். அருள் நெறி பரவத் துணைபுரியும் அன்னாருக்கு அறுமுகவன் திருவருள் என்றும் நின்று துணை புரிவதாக.

அன்பன்,
கிருபானந்தவாரி

## சந்தா நேயர்களுக்கு

திருப்புகழ்மிர்த இதழ்கள் ஒவ்வொரு ஆங்கில மாதமும் 16-ந் தேதி (அன்று விடுமுறையானால் அடுத்துவரும் விடுமுறையல்லாத நாளில்) தபாலில் சேர்க்கப்படும். ஆகவே சந்தாத் தொகைகள் எந்தத் தேதியில் கிடைத்தாலும் அடுத்துவரும் 16-ந் தேதியளவில் தான் திருப்புகழமிர்த இதழ்கள் அனுப்பி வைக்கப்படும்.

பத்திரிகை எந்த மாதமாவது கிடைக்காவிட்டால் அந்த (ஆங்கில) மாதம் 25-ந் தேதி வரை பொறுத்துப் பார்த்துவிட்டு அதற்குமேல் எமக்கு எழுதவேண்டும். அதற்கு முன் எழுதப்படும் கடிதங்கள் கவனிக்கப்படமாட்டா. ஒரு மாதத்துக்கு மேற்பட்டுத் தெரிவிப்போர் கிரயம் செலுத்திப் பெறவேண்டும்.

பிரதிகள் மாதா மாதம் ஒழுங்காகக் கிடைக்கப் பெறாத அன்பர்கள் அந்தந்த வட்ட தபால் மேற்பார்வையாளர்களுக்குப் புகார் எழுதியனுப்பி ஒழுங்கு செய்து கொள்ளவேண்டும். இவ்விடம் தபாலில் சேர்ப்பதுவரைதான் எமது பொறுப்பு. தபாலில் தவறும் பிரதிகளுக்கு நாம் பொறுப்பேற்க இயலாது.

பதிலை எதிர்பார்ப்போர் பதிலுக்கு உண்டான கார்டு அல்லது கவர், ஸ்டாம்பு இவைகளையும் சேர்த்தனுப்ப வேண்டும்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

### திருப்புகழமிர்தம் ஆண்டுச் சந்தா

| | | |
|---|---|---|
| இந்தியா / இலங்கை | ... | ரூ. 3-50 |
| மற்ற நாடுகள் | ... | ரூ. 5-50 |

உ

ஓம் குஹாய நம






# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"


மலர் 34 | சௌமிய ஞூ—சித்திரை மீ ஏப்ரல் 1969 | இதழ் 1


## திருப்புகழ்

### திருவருணை

வடவையன லூடு புக்கு முழுகியெழு மாம திக்கு
மதுரமொழி யாழி சைக்கு மிருநாலு
வரைதிசைவி டாது சுற்றி யலறுதிரை வாரி திக்கு
மடியருவ வேள்க ணைக்கு மறவாடி

நெடுகனக மேரு வொத்த புளகமுலை மாத ருக்கு
நிறையுமிகு காத லுற்ற மயல்தீர
நினைவினெடு பீலி வெற்றி மரகதக லாப சித்ர
நிலவுமயி லேறி யுற்று வரவேணும்

மடலவிழு மாலை சுற்று புயமிருப தோடு பத்து
மவுலியற வாளி தொட்ட அரிராமன்
மருகபல வான வர்க்கு மரியசிவ ஞர்ப டிக்க
மவுனமறை யோது வித்த குருநாதா

இடையரியு லாவு முக்ர அருணகிரி மாந கர்க்கு
ளினியகுண கோபுரத்தி லுறைவோனே
எழுபுவிய ளாவு வெற்பு முடலிநெடு நாக மெட்டு
மிடையுருவ வேலை விட்ட பெருமாளே.

## பதவுரை

மடல் அவிழு மாலே சுற்று=இதழ் விரிந்த மலர் மாலைகளைச் சுற்றியணிந்துள்ள, புயம் இருபதோடு=இருபது புயங்களும், பத்து மவுலி அற=பத்துத் தலைகளும் அற்று விழுமாறு, வாளி தொட்ட=கணைகளை விடுத்த, அரி ராமன்=பாவங்களைப் போக்குகின்ற இராம பிரானுடைய, மருக=திருமருகரே! பலவானவர்க்கும் அரிய=பல தேவர்க்கும் அரியவரான, சிவனார் படிக்க=சிவபெருமான் உணர, மவுன மறை ஓதுவித்த குருநாதா=மௌன மந்திரத்தை உபதேசித் தருளிய குருநாதரே! இடை அரி உலாவும் உக்ர=வழியிலே பாம்பு அல்லது குரங்குகள் உலாவுகின்றதனால் அச்சத்தைத் தருகின்ற, அருணகிரி மாநகர்க்குள்=திருவண்ணாமலை என்னும் திருநகருக்குள், இனியகுண கோபுரத்தில் உறைவோனே=இனிமையைத் தருகின்ற கிழக்கு கோபுரத்தின்கண் எழுந்தருளியிருப்பவரே! எழு புவி அளாவு வெற்பும்=ஏழு உலகளவும் அளாவி நிற்கும் மேரு மலை யுடன், உடலி நெடும் நாகம் எட்டும்=மாறுபட்டுப் பொருது எட்டு பெரிய மலைகளையும், இடை உருவ வேலே விட்ட=ஊடுருவுமாறு வேலாயுதத்தை விட்ட, பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! வடவை அனல் ஊடு புக்கு முழுகிஎழு மாமதிக்கும்=வடவைத் தீயின் உள்ளே நுழைந்து முழுகி எழுகின்ற முழு நிலாவுக்கும், மதுர மொழி யாழ் இசைக்கும்=இனிய மொழியை வழங்கும் யாழின் இசை யொலிக்கும், இரு நாலு வரை திசை விடாது சுற்றி அலறு திரை வாரிதிக்கும்=எட்டு மலைகள், எட்டு திசைகள் இவை முழுதும் விடாமல் சுற்றி வளைந்து பேரொலி செய்யும் அலை கடலுக்கும், மடி அருவ வேள் கணைக்கும்=இறந்து உருவம் இழந்து அருவமாயுள்ள மன்மதனுடைய பாணங்களுக்கும், அற வாடி=மிகவும் வாடி, நெடு கனக மேரு ஒத்த=நீண்ட பொன் மேரு மலைக்கு நிகரான, புளக முலை மாது=புளகங் கொண்ட கொங்கையையுடைய இந்த மாது, அருக்கு=அருமையாக, நிறையு மிகு காதல் உற்ற மயல் தீர=நிறைந் துள்ள மிக்க காதல் கொண்ட மயக்கம் தீருமாறு, நினைவினொடு=இவள்மீது நினைவு வைத்து, பீலி=பீலிகளையுடையதும், வெற்றி மரகத கலாப=வெற்றியையுடையதும் பச்சைத் தோகையையுடை யதும், சித்ர நிலவும்=அழகு பொலிவதுமாகிய, மயில் ஏறி உற்று வரவேணும்=மயிலின்மீது ஆரோகணித்து வந்தருளவேண்டும்.

## பொழிப்புரை

இதழ்கள் விரியும் மலர் மாலைகளை யணிந்துள்ள இருபது தோள்களும், பத்துத் தலைகளும் அற்று விழுமாறு, கணை யேவியவரும், பாவத்தைப் போக்குபவருமாகிய இராமபிரா னுடைய திருமருகரே! பல அமரர்கட்கும் அரியவரான சிவ பெருமான் உணருமாறு மவுன மந்திரத்தை உபதேசித்த

குருநாதரே! இடையில் பாம்பு அல்லது குரங்குகள் உலாவு கின்றதும், அச்சத்தைத் தருவதுமான, திருவண்ணுமலை என்ற திருநகரத்திலே இனிய கிழக்குக் கோபுரத்தில் வீற்றிருப்பவரே! ஏழுலகளவும் அளாவியுள்ள மேருகிரியையும், எண்கிரிகளையும் ஊடுருவுமாறு வேலாயுதத்தைச் செலுத்திய பெருமிதம் உடையவரே! வடவைத் தீயில் முழுகி எழுகின்ற எழு நிலாவுக்கும், இனிது இசைக்கும் யாழொலிக்கும், எட்டு மலைகளையும் எண் திசைகளையும் விடாது சுற்றி வளைந்து பேரொலி செய்கின்ற அலைவீசும் கடலுக்கும், மடிந்து உருவமின்றி அருவமாய் நிற்கும் மன்மதன் கணைக்கும் மிகவும் வாடி, பொன் மேருமலையொத்த பூரித்த தனங்களையுடைய இம்மாது, அருமையும் நிறைவும் உடைய காதலால் கொண்ட மயக்கந்தீருமாறு, இவளைத் திருவுளம்பற்றி, பீலியும், வெற்றியும், பச்சைத் தோகையும், அழகும் உடைய மயிலின்மீது ஏறி வந்தருள வேண்டும்.

## விரிவுரை

இத் திருப்புகழ் அகப்பொருள் துறையில் அமைந்தது.

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு முழுநிலா வொளி, யாழிசை, கடலொலி, மன்மதன் கணை, மாதர் வசைமொழி இவைகள் மிகுந்த வேதனையைத் தரும்.

**வடவையனலூடுபுக்கு முழுகி எழு மாமதிக்கு:—**

பொதுவாகச் சந்திரன் எல்லோருக்குங் குளிர்ச்சியைத் தருகின்றவன். ஆனல் பிரிவுத்துயரால் வருந்தும் காமுகர்க்கு சந்திரன் நெருப்பையள்ளிக் கொட்டுவதுபோல் துன்பத்தை விளைவிப்பன்.

எல்லோர்க்கும் இனிய சர்க்கரை சுரநோயுடையார்க்குக் கசப்பதுபோல் என அறிக.

வடவையனல் என்பது, கடல் நீரைச் சமமாக்கும் பொருட்டு குதிரை முகத்துடன் அமைந்த ஒரு பெரிய நெருப்பு. இதை வடவாமுகாக்கினி யென்பர்.

இந்தத் தீயில் முழுகி எழுந்தால் எத்துணைத் துன்பம் உண்டாகுமோ, அத்துணைத் துன்பத்தைத் தருகின்றதாம் முழுநிலா.

**மதுரமொழி யாழிசைக்கு:—**

இனிமையாக இசைத்தேன் வீசும் யாழ் ஒலியால் இவள் துயருறுகின்ருள்.

**அலறுதிரை வாரிதிக்கு:—**

இனிய கடல் ஓசையால் இவள் கலக்கமுறுகின்ருள்.

"தொல்லை நெடுநீலக் கடலாலே" —(துள்ளு) திருப்புகழ்.

**மாதருக்கு:—**

மாது அருக்கு எனப் பதப்பிரிவு செய்துகொள்க.

அருக்கு—அருமையான.

இம்மாது நிலவாலும் யாழினாலும் கடலோசையாலும் மதன் கணையாலும் மிகவும் வாடியயர்ந்து போனாள்.

**நிறையமிகு காதலுற்ற மயல்தீர:—**

"முருகா! உன்மீது இவள் நிரம்பவும் மிகுந்த காதல் கொண்டு மயங்கியுள்ளாள். ஆதலால் இவள் மயல் தீருமாறு நீ மயில்மீது வந்தருள்" என்று பாங்கி இறைவனை வேண்டுகின்ற பாவனையில் இத்திருப்புகழ் அமைந்துள்ளது.

**நினைவினொடு:—**

தேவரீர் தமது திருவுளத்தில் இவளை ஒரு சிறிது நினைவு கொண்டு வந்தருளவேண்டும்.

**பீலி வெற்றி மரகத கலாப சித்ர நிலவுமயிலேறியுற்று வரவேணும்:—**

பீலியையும், வெற்றியையும் பச்சைத் தோகையையும் அழகையும் கொண்டது மயில்.

இத்தகைய இனிய மயில்மீது ஏறி இவளை வந்து காத்தருள்—என்று பாங்கி பரமனிடம், பரவுகின்றாள்.

**அரிராமன்:—**

இந்த 5-வது அடியில் இராமர் இராவண சங்காரம் புரிந்ததைக் குறிப்பிடுகின்றார்.

அரி—பாவங்களை யழிப்பவர்.

'அரி ரகுராமர் சிந்தை மகிழ் மருகோனே"

—(சிவனார்) திருப்புகழ்.

**பல வானவர்க்கு மரிய சிவனார் படிக்கு மவுனமறை யோதுவித்த:—**

சிவபெருமான் தேவர்க்கு அரியவர்.

"கனவேயுந் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்"

—திருவாசகம்.

தேவதேவன் அத்தகைய பெருமான்; சிஷ்யபாவத்தை உணர்த்தி உலகத்தை உய்விக்கும் பொருட்டு, தனக்குத்தானே மகனாகி, தனக்குத்தானே உபதேசித்துக் கொண்ட ஒரு அருள் நாடகம் இது.

உண்மையிலே சிவபெருமான் உணர முருகன் உபதேசித்தார் என்று எண்ணுதல் கூடாது.

தனக்குத்தானே மகனுகிய தத்துவன்
தனக்குத்தானே யொருதாவரு குருவுமாய்
தனக்குத்தானே யருள் தத்துவங்கேட்டலும்
தனக்குத்தான் நிகரினுன் தழங்கிநின்ருடினுன்.

—தணிகைப் புராணம்.

இல்[illegible]யுலாவு முக்ர:—

அரி—பாம்பு, குரங்கு: திருவண்ணுமலையில் பாம்புகள் உலாவுவதும், ஊருக்குள் குரங்குகள் உலாவுவதும் இன்றும் கண்கூடு.

''அரிதாமலிந்த அண்ணுமலை'' —அப்பர் தேவாரம்.

குணம்—கிழக்கு; திருவண்ணுமலையில் கிழக்குக்கோபுரக் குடவரையில் முருகவேள் இருந்து அன்பர்க்குக் காட்சி தந்து அருள்புரிகின்ருர்.

''அரவுமிழ் மணி கொள் சோதி அண்ணுமலை'' —அப்பர்

''அல்லாடரவம் இயங்குஞ்சாரல் அண்ணுமலை'' —சம்பந்தர்

### கருத்துரை

அருணமேவும் : அண்ணலே! உன்னை மருவ விரும்பி வாடும் இவளை ஆட்கொள்ள மயிலின்மீது வந்தருள்.

## திருப்புகழ்

ஆலவிழி நீலத் தாலதர பானத்
தாலளக பாரக் கொண்டலாலே
ஆரநகை யால்விற் போர்நுதலி னுல்வித்
தாரநடை யால்நற் கொங்கையாலே

சாலமய லாகிக் காலதிரி சூலத்
தாலிறுகு பாசத் துன்பமுழ்கித்
தாழ்விலுயிர் வீழ்பட் டுழ்வினைவி டாமற்
சாவதன்மு னேவற் கொண்டிடாயோ

சோலைதரு கானிற் கோலமற மானைத்
தோளிலுற வாகக் கொண்டவாழ்வே
சோதிமுரு காநித் தாபழய ஞானச்
சோணகிரி வீதிக் கந்தவேளே

பாலகக லாபக் கோமளம யூரப்
பாகவுமை பாகத் தன்குமாரா
பாதமலர் மீதிற் போதமலர் தூவிப்
பாடுமவர் தோழத் தம்பிரானே.

## பதவுரை

சோலை தரு கானில் = சோலைகள் நிறைந்த கானகத்தில், கோல மறமானை = அழகிய வேடர் குலத்து மான் போன்ற வள்ளி பிராட்டியை, தோளில் உறவு ஆக கொண்ட வாழ்வே = திருத்தோளில் உறவு பூண்டு தழுவிக் கொண்ட செல்வமே! சோதி முருகா = ஜோதி வடிவாய முருகக் கடவுளே! நித்தா = அழிவில்லாதவரே! பழைய ஞான சோண கிரி வீதி = பழமையானதும், ஞான பூமியுமான திருவண்ணுமலையில் திருவீதியில் வீற்றிருக்கும், கந்த வேளே = கந்தக் கடவுளே! பாலக = குழந்தை வடிவானவரே! கலாப கோமள மயூர பாக = தோகையும் அழகும் உடைய மயிலை நடாத்துபவரே! உமை பாகத்தன் குமாரா = உமை பங்களுகிய சிவபெருமானுடைய திருக்குமாரரே! பாத மலர் மீதில் = திருவடி மலரில், போத மலர் தூவி = ஞான மலரையிட்டு, பாடும் அவர் தோழ = பாடித் தொழுபவர்களின் தோழரே! தம்பிரானே = தனிப் பெருந் தலைவரே! ஆல விழி நீலத்தால் = நஞ்சு போன்ற கண்களாகிய நீலோற்பல மலராலும், அதர பானத்தால் = வாயிதழ் ஊறலைப் பருகுவதாலும், அளக பார கொண்டலாலே = கூந்தல் பாரமாம் மேகத்தாலும், ஆர நகையால் = முத்துப் போன்ற பற்களாலும், வில் போல் நுதலினுல் = போருக்கு உரிய வில் போன்ற நெற்றியாலும், வித்தார நடையால் = விரிவான பலவித நடையாலும், நல் கொங்கையால் = நல்ல கொங்கையாலும், சால மயல் ஆகி = மிகவும் மோக மயக்கங் கொண்டவனுய், கால திரி சூலத்தால் = காலனுடைய முத்தலைச் சூலத்தைக் கண்டு, இறுகு பாசத் துன்பம் மூழ்கி = அவன் கட்டும் பாசக் கயிற்றினுல் துன்பத்தில் ஆழ்ந்து, தாழ்வில் உயிர் வீழ்பட்டு = அத்துயரில் உயிர் வீழுதல் உற்று, ஊழ்வினை விடாமல் = ஊழ்வினை விடாதபடி, சாவதன் முன் = அடியேன் அவமே இறந்து போவதற்கு முன், ஏவல் கொண்டிடாயோ = அடியேனை ஆட்கொள்ள மாட்டீரோ?

## பொழிப்புரை

சோலைகள் அடர்ந்த கானகத்தில் அழகிய குறமகளாம் வள்ளிநாயகியைத் திருத்தோளில் உறவு பூண்டு தழுவிக் கொண்ட செல்வமே! ஜோதிமயமான முருகக்கடவுளே! என்றும் அழிவில்லாதவரே! பழமையானதும் ஞானபூமியுமாகிய திருவண்ணுமலையில் திருவீதியில் எழுந்தருளியிருக்கும் கந்த வேளே! இளம்பூரணரே! தோகையும் அழகும் உடைய மயிலை நடாத்துபவரே! உமாதேவியை ஒரு புறத்தேயுடைய சிவ குமாரரே! திருவடிமலர்மீது ஞானமலர்களை அர்ச்சித்துப்பாடிப் பரவுகின்ற அடியவர்க்குத் தோழரே! தனிப்பெருந் தலைவரே! நஞ்சுபோன்றதும் நீலோற்பல மலர் போன்றதுமான கண்களாலும், வாயிதழ் ஊறல் பருகுவதாலும், மேகம்போன்ற

கூந்தல் பாரத்தாலும், முத்துப்போன்ற பற்களாலும், போருக்குரிய வில்லைப்போன்ற வளைந்த நெற்றியினாலும், பலவித விரிவான நடையினாலும் நல்ல கொங்கைகளாலும், அடியேன் மிகவும் போக மயக்கங்கொண்டு, காலனுடைய முத்தலைச் சூலத்தைக் கண்டு, அவன் கட்டும் பாசக் கயிற்றால் துன்பத்தில் முழுகி அத்துன்பத்தில் உயிர்சோர்தலடைந்து, ஊழ்வினை காரணமாக அடியேன் இறப்பதற்கு முன், எளியேனை அடிமை கொண்டு ஆட்கொள்ள மாட்டீரோ ?

## விரிவுரை

இத்திருப்புகழில் முதல் இரண்டடிகள் பொது மகளிரது அங்கங்களால் இளைஞர் ஈடழிவதைக் கூறுகின்றார்.

**ஆலவிழி நீலத்தால் :—**

மாதர்களின் கண்கள் ஆலம்போலும் நீலம்போலும் விளங்கும். ஆலவிழி, நீலவிழி என்று அழகுறக் கூறுகின்றார்.

ஆலம்—உண்டாரைக் கொல்லும்; மாதர்விழி—கண்டாரையே கொல்லும் கொடுமையுடையது.

நீலோற்பல மலரைப்போல் அழகியது. இக்கண்ணழகால் ஆடவர் மயங்கி ஆவிசோர்வார்கள்.

**அதரபானத்தால்:—**

காமுகர் தம் மோகவிடாய் தீரத் தாம் விரும்பிய மாதரது அதரபானத்தைப் பருகி இன்புறுவர்.

> "குமுத அமுத இதழ் பருகியுருகி மயல்
> கொண்டுற் றிடுநாயேன்" —(கொலைமத) திருப்புகழ்.

**அளகபாரக் கொண்டலாலே:—**

ஆடவரைப் பொதுமகளிர் அதிகமாகக் கவர்ந்து மயக்குவதற்குக் கருவியாகக் கொள்வது கூந்தல்தான்.

மாதர்கள் கூந்தலாகிய காட்டிலே, தங்கள் கண்களாகிய வலையை வைத்து ஆடவருடைய உயிராகிய பறவையைப் பிடித்துவிடுவார்களாம்.

> "திண்ணிய நெஞ்சப் பறவை சிக்கக் குழற்காட்டில்
> கண்ணி வைப்பார் மாயங் கடக்குநாள் எந்நாளோ"
> —தாயுமானார்.

**ஆரநகையால்:—**

ஆரம்—முத்து. முத்துப்போன்ற புன்சிரிப்பால் ஆடவரை மயக்குவர் பொதுமாதர்.

**விற்போர் நுதலினால்:—**

போருக்குரிய வில்லைப்போல் வளைந்து அழகு செய்வது பெண்களின் நெற்றி. அது அஷ்டமி திதியிலே தோன்றும் சந்திரனைப்போல் விளங்கும்.

**வித்தார நடையால்:—**

வித்தாரம்—பலவகையில் விரிவாக விளங்குவது.

அன்னம்போலும், கஜம்போலும், மஞ்ஞைபோலும் பல வகையாக இனிமையாக நடந்து ஆடவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்வார்கள்.

**சாலமயலாகி:—**

மேலே கூறிய பலவகையான மாதரங்கங்களின் வனப்பினால் அதிகம் மோக மயக்கங்கொண்டு காலத்தை வீணே கழிப்பர்.

**கால திரிசூல:—**

காலன்—இயமனுடைய அமைச்சன்; காலம் பார்த்து வருபவன். அதனால் காலன் எனப்பட்டான். இவன் கையில் திரிசூலந்தாங்கி யிருப்பான்.

**இறுகு பாசத்துன்ப மூழ்கி:—**

காலன் வந்து உயிரை பாசக்கயிற்றால் இறுக்கிக் கட்டிக் கொண்டு போவான். அப்போது உயிர் துன்பத்தில் முழுகித் துடிக்கும்.

**தாழ்விலுயிர் வீழ்பட்டு:—**

அத்தாழ்வினால் உயிர் வீழ்தல் உற்றுத் துயருறும்.

**ஊழ்வினை விடாமல்:—**

முன் செய்த ஊழ்வினையின்படி மரணம் வந்து எய்தும்.

**சாவதன் முனேவற் கொண்டிடாயோ:—**

"அடியேன் அவ்வாறு இறப்பதற்கு முன் முருகா! உன் திருவடியில் என்னைத் தொண்டுகொண்டு காத்தருள் புரிவாயாக" என்று அடிகளார் வேண்டுகின்றார்.

**குறமானைத் தோளிலுறவாகக் கொண்ட வாழ்வே:—**

வள்ளி பிராட்டியை முருகப்பெருமான் தமது பன்னிரு தோள்களால் தழுவி அருள்புரிந்தார்.

"உரத்தோளிடத்தில் குறத்தேனை வைத்தி
டொளித் தோடும் வெற்றிக் குமரேசா"

—(அருக்கார்) திருப்புகழ்.

**சோதி முருகா:—**

பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாக உதித்தவர் முருகப் பெருமான்.

அருட்பெருஞ்சோதியாக நிற்பவர் முருகர். அதனுல் "சோதி முருகா" என்ருர்.

**நித்தா:—**

நித்தம்—அழிவில்லாதது.

கடல், விண், மண், கதிர், மதி, மலை எல்லாம் ஒரு காலத்தில் அழிந்துபோம். இறைவன் ஒருவன் என்றும் அழிவின்றி நிற்பவன். ஆதலால் 'நித்தா' என்ருர். அழிவின்மையை நாடுபவர் அழிந்துபோகின்ற பொருள்களைச் சாராமல், அழியாத இறைவனைச் சார்ந்து, அழிவின்மையைப் பெறுதல் வேண்டும்.

இதனைத் திருவள்ளுவர் அழகாக உணர்த்துகின்ருர்.

**'சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச்**
**சார்தரா சார்தரு நோய்"**

**பழயஞானச் சோணகிரி வீதிக் கந்தவேளே:—**

திருவண்ணுமலை பல யுகங்கட்குமுன் தோன்றிய திருத்தலம். அதனுல் "பழைய" என்ருர்.

ஞானபூமியாக விளங்குவது பல ஞானியர் இத்தலத்தில் அவதரித்தார்கள். பலர் இங்கு வந்து ஞானம் பெற்ருர்கள். சில ஆண்டுகட்கு முன்னும் ஞானிகள் பலர் இங்குதங்கி ஞான வொளியைப் பரப்பினுர்கள். குகை நமசிவாயர், குரு நமசிவாயர், முதலிய மகான்கள் தங்கித் தவஞ்செய்த அரிய திருத்தலம் திருவண்ணுமலை.

சோணம்—சிவப்பு. சிவந்த மலை. அதனுல் சோணகிரி, சோணுத்திரி சோண சைலம் முதலிய பேர்கள் பெற்றது.

இத்திருப்புகழும் அடுத்த திருப்புகழும் திருவீதியில் நிற்கும் திருமுருகன்மீது பாடியவை ஆகும்.

**பாதமலர் மீதில் போதமலர் தூவிப்பாடுமவர் தோழ:—**

போத மலர்—ஞானமாகிய மலர்.

"ஞானம் வீசிப்ரகாசியாநிற்ப...புட்பமாலை
...அணிவேளே" —(ஆசைகூர்) திருப்புகழ்.

ஞானபூஜை செய்வார் இறைவனுக்குச் சாத்தும் மலர்கள் இவை.

கொல்லாமை, ஐம்பொறி அடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்ற அஷ்ட மலர்களாகும்.

# கற்பு

## செல்லம்மா

செல்லம்மா தன் உறவினர் வீட்டிற்குப் போய் மாலை தன் இல்லத்தையடைந்தாள். அவள் வீடு சென்னை திருவல்லிக்கேணி பெரிய தெருவில் இருந்தது.

செல்லம்மாளின் கணவனார் டெல்லியில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். மாதம் மாதம் குடும்பத்துக்குப் போதுமான பணத்தை அனுப்பிக் கொண்டிருந்தார். செல்லம்மாவுக்கு ஒரே பெண். செல்வமாக வளர்ந்தாள். சூதுவாது அறியாத அப்புதல்வி S. S. L. C. தேர்ச்சி பெற்று இருந்தாள். தேன்மொழி என்ற அவளுடைய பேருக்கு ஏற்ப யாருடனும் இனிமையாகப் பேசுவாள். உள்ளமும் கள்ளமில்லாத வெள்ளையானது.

செல்லம்மா வீட்டிற்கு வந்து நாற்காலியில் இருந்தாள். தேன்மொழி தாயாரைப் பார்த்து, ''அம்மா! அவசரமாக ஜெனரல் ஆஸ்பத்திரியில் ஒரு நோயாளிக்கு உணவு தர வேண்டும் என்று

---

''ஞான நெறிநிற்றல் அர்ச்சனை
ஓவற உட்பூசனை செய்யில் உத்தமம்''—திருமந்திரம் 1849.

போதம்—ஜீவபோதம். நான் நான் என்ற ஜீவபோதத்தை இறைவன் திருவடியிலே சாத்திவிட்டு நானற்ற நிலையில் நின்று தானுந் தன்மை பெற்று அந்த நிலையில் பாடும் பரம பக்தருடைய தோழன் முருகன் என்றும் பொருள்படும்.

''நாகமணி கின்ற நாதனிலை கண்டு
நாடி யதில்நின்று தொழுகேனோ ?''

என்ற திருப்புகழ்—(வாதினையடர்ந்த) அடியின் நயமும் இங்கு காண்க.

நாகமணிகின்ற—நாஹம் என்ற சொல் நாகம் என்று வந்தது. நாஹம்—ந அஹம். நான் இல்லை. நானற்ற இடம் தானாகிய தற்பரமாகின்றது.

எனவே முருகன் திருவடியிலே நான் நான் என்று எண்ணுகின்ற ஜீவபோதமாகிய மலரை அர்ச்சித்துவிட்டு நான் போய் தானாய் நிற்கவேண்டும் என்ற தத்துவத்தைச் சுவாமிகள் இங்கு அற்புதமாக உபதேசிக்கின்றார்.

### கருத்துரை

அருணபுரி வீதியில் நிற்கும் வேலவா! இறவா முன் என்னை ஏவல்கொண்டு காத்தருள்.

உணவு வாங்கி வருமாறு தாங்கள் அனுப்பியதாக ஒருவர் வந்து கேட்டார். எவர்சில்வர் டிபன் ஏனத்தில் உணவு தந்தேன். அந்த ஏனம் வரவில்லை'' என்றாள்.

செல்லம்மா! ''மகளே! நீ படித்த பெண் ஆயிற்றே. இப்படி ஏமாறலாமா? நான் சொல்லியனுப்பவில்லை. 85 ரூபாய் ஏனம் தொலைந்தது.'' என்றாள்.

தேன்மொழிக்கு முகம் வாடிவிட்டது. தன் அறியாமையை நினைத்து வருந்தினாள். ''அம்மா! என் குற்றத்துக்கு வருந்து கின்றேன். என்னை மன்னிக்க வேணும்'' என்றாள்.

செல்லம்மா! ''குழந்தாய்! உலகமே ஏமாற்று மயமாக இருக் கின்றது. இப்படி எத்தனை எத்தனையோ ஏமாற்றுக்கள். இந்த உலகில் வெகு எச்சரிக்கையாக இருக்கவேண்டும். இல்லையேல் நம்மை விழுங்கிவிடுவார்கள். ஒரு செய்தியைக் கூறுகிறேன்; கேள்.

சென்னை ஆழ்வார்பேட்டையில் இருக்கும் என்ஜினீயர் கோபா லய்யர், தன்மகளை பம்பாயில் கல்யாணம் செய்து கொடுத்திருந்தார். மாப்பிள்ளை பம்பாயில் பெரிய பதவியில் இருந்தார்.

மகளை அழைத்துக் கொண்டு பம்பாய்க்குப் புறப்பட்டார். நடுவில் பண்டரிபுரம் போய், பாண்டுரங்கனைச் சேவித்தார். அங் கிருந்து பம்பாய்க்கு டிக்கட்டு வாங்கி ரயிலில் ஏறினார். போகின்ற வழியில் கணவனுடன் வாழும் வகைகளை எடுத்துக் கூறிக்கொண்டு போனார். தாதர் என்ற ஸ்டேஷனில் மகளுடன் இறங்கினார். மாதுங்காவுக்குப் போக வேண்டி ஒரு டாக்ஸியில் ஏறினார். அந்தப் பெண் பூலோக ரம்பைபோல் காட்சியளித்தாள். அவளைப் பார்த்த வுடன் டிரைவரின் உள்ளம் கிறுகிறுத்தது. காதலால் மயங்கினான். கார் ஓடும்போது வேண்டுமென்றே பிரேக் போட்டு நிறுத்தி விட்டான். சில நிமிஷம் ரிப்பேர் செய்வதுபோல் பாசாங்கு செய் தான். அப்பெண்மணியைக் கடைக்கண்ணால் பார்த்தான். டிரை வர் கோபாலையரைப் பார்த்து, ''ஐயா! கொஞ்சம் இறங்கி வண்டியை அசைத்து விடுங்கள்'' என்றான். கோபாலய்யர் இறங்கிப் பின்புறம் வண்டியைத் தள்ளினார். உடனே டிரைவர் காரை ஓட்டிக்கொண்டு வாயு வேகத்தில் ஓடிவிட்டான். கோபாலய்யர் அப்படியே அயர்ந்து நின்றுவிட்டார். இன்று வரை அதுபற்றி ஒரு தகவலும் தெரியவில்லை.

''அம்மா! மற்றொரு செய்தியைக் கேள். பஸ்ஸில் பலர் பிர யாணம் செய்து கொண்டிருந்தார்கள். கண்டக்டர் ஒருவனை டிக்கட்டு வாங்குமாறு பணம் கேட்டான். அவன் சட்டைப் பையில் கை வைத்து ''ஓ'' என்று உடம்பைக் குலுக்கி அலறினான். ''ஐயா! நான் புரசவாக்கம் போகவேணும். சட்டைப் பையில் இருந்த மணி

பர்சை யாரோ அடித்துவிட்டான். தெய்வமே! என்ன அநியாயம். அக்கிரமம். இப்படியுமா இந்த உலகம் சீர்கெட்டுவிட்டது'' என்று பதறினன். எதிரில் இருந்த தரும சிந்தனையுள்ள அன்பர் தன் மணி பர்சையெடுத்து 22 நயா பைசாவைக் கொடுத்துப் புரசவாக்கத்துக்கு டிக்கட்டு வாங்கிக் கொடுத்தார்.

அந்த மனிதன் ''ஐயா! உங்களுக்கு மிகுந்த நன்றி. தங்களைப் போன்ற உத்தமர்களைக் காண்பது அரிது. ஆ! ஆ! கள்ளிச் செடிகளும், கருவேல்முள் மரங்களும், எட்டியும் எருக்குமாக நிறைந்துள்ள உலகில் தாங்கள் கற்பகக் கன்று போல் காட்சி தருகின்றீர். உங்கள் உள்ளம் திருப்பாற் கடல் போன்றது. என்ன உபகார சிந்தை.

''காலத்தினல் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.''

என்ற திருக்குறள்தான் என் நினைவுக்கு வருகின்றது. உத்தம குணமும் உயர்ந்த பண்பும் நிறைந்த தங்களை இன்று சந்தித்தது என் புண்ணியப் பயனுகும். இந்தக் காலத்தில் பெற்ற தாய்க்குப் பிள்ளைகள் சோறு போடமாட்டார்கள். அண்ணனும் தம்பியும் அடித்துச் சண்டை பிடித்துக் கொள்ளுகின்றூர்கள். அநியாயம் கோர தாண்டவம் புரிகின்ற கொடிய உலகிலே குணக்குன்றமாகத் தாங்கள் விளங்குகின்றீர். உங்களை நான் அன்பராகப் பெற்றது பெரும் பாக்கியம். உங்கள் விலாசந் தரலாமா?'' என்று குழைந்து குழைந்து பேசினன்.

அவர் தன் விலாசம் எழுதிக் கொடுத்தார். இறங்க வேண்டிய இடம் வந்தவுடன் அவன் அவரை வணங்கிவிட்டு இறங்கினன்.

உடனே அவன் நேரே அந்த விலாசத்துக்குப் போனுன். வீட்டுக்குள் நுழைந்து நீலிக் கண்ணீர் விட்டான்.

''அம்மா! ஐயா காரில் அடிபட்டு விட்டார். நான்தான் ஒரு வாடகைக் காரில் கொண்டு போய் ஜெனரல் ஆஸ்பத்திரியில் சேர்த்தேன். இதோ ஐயா தன் கையால் விலாசம் எழுதி உங்களிடம் தரச் சொன்னூர். இந்தாருங்கள். ஸ்பெஷல் வார்டில் சேர்த்துள்ளேன். 13-ம் நெம்பர் அறையில் இருக்கின்றூர். டாக்டர்கள் பார்க்கின்றூர்கள். உங்களை உடனே வரச் சொன்னூர். என்னிடம் ரூ. 200 தரச் சொன்னூர். இந்த மருந்துகளை வாங்க வேணுமாம். பெரிய ஆபத்து. கால் முறிந்துவிட்டது. நல்ல காலம் உயிருக்கு ஆபத்து இல்லை அம்மா! தெய்வந்தான் உங்கள் திருமாங்கல்யத்தைக் காப்பாற்றியது. தலைக்கு வந்தது காலுடன் நின்றது. நான் வாயு வேகத்தில் போகவேணும். சீக்கிரம் புறப்படுங்கள். உங்களைப் பார்த்தால் மகாலட்சுமி நினைவு வருகின்றது. உங்கள் முகத்தில் கருணை வழிகின்றது'' என்றூன்.

அந்த அம்மா அலறினுள். பெட்டியைத் திறந்து 200 ரூபாயை எடுத்து அவன் கையில் கொடுத்தாள். அவன் கூறியவைகளை எழுதிக் கொண்டு, வாடகைக் காரில் கண்ணீர் வடித்துக்கொண்டு போனுள்.

ஜெனரல் ஆஸ்பத்திரியில் போய் அங்கும் இங்கும் அலைந்தாள். அவன் கூறியபடி அந்த வார்டில் கணவனும் இல்லை. பலமுறை பலரிடம் விசாரித்தாள். ஒன்றுமே புலன் தெரியவில்லை.

அவன் இருநூறு ரூபாயைச் சுருட்டிக்கொண்டு நீட்டினுன் கம்பி.

கோபாலய்யர் வீட்டிற்கு வந்தார். வீடு பூட்டியிருந்தது. மனைவி எங்கு போனுள்? அப்படி என்ன அவசரம்? என்று எண்ணி திண்ணையில் அமர்ந்து செய்தித்தாளைப் புரட்டிக் கொண்டிருந்தார்.

ஆஸ்பத்திரி முழுவதும் தேடி அலைந்து உலைந்து அயர்ந்த அந்த அம்மாள் ஒரு டாக்ஸியில் வீடு வந்து சேர்ந்தாள். கணவனுர் திண்ணையில் இருக்கக் கண்டாள். ஆச்சரியம் அடைந்தாள். ''ஓ'' என்று கதறியழுதாள். கோபாலய்யருக்கும் ஒன்றும் புரியவில்லை. என்ன? என்ன?'' என்று கேட்டார்.

கதவைத் திறந்து உள்ளே போய் நடந்தது பூராவும் சொன்னுள். கோபாலய்யர், ''அடி பயித்தியமே! நீ ஏமாந்து போனுய். ரூபாய் 200 தொலைந்தது'' என்ருர்.

அவள் ''ஆமாம்! உங்கள் கையெழுத்தைப் பாரும். நீங்கள் தானே விலாசம் எழுதிக் கொடுத்திருக்கின்றீர்?'' என்று கேட்டாள்.

அப்போதுதான் கோபாலய்யருக்கு விஷயம் விளங்கியது. பர்சு தொலைந்ததுபோல் நடித்து, நம் கையால் விலாசம் எழுதி வாங்கிக் கொண்டு அந்தப் பாவி ஏமாற்றிவிட்டான்'' என்று கருதி ஒரு பெரு மூச்சு விட்டார். உலகம் இப்படி இருக்கின்றது. எப்படி எப்படி யெல்லாம் ஏமாற்றுகின்ருர்கள். ''தெய்வமே! உலகில் வெகு ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். 22 நயா பைசா கொடுத்து டிக்கட்டு வாங்கித் தந்ததற்கு அபராதம் 200 ரூபாய் போலும்.'' என்று எண்ணி பஸ்ஸில் நடந்ததை மனைவியிடம் கூறினுர். என்னமோ நீங்கள் சுகமாகச் சேர்ந்தது பெரிய சந்தோஷம். ரூபாய் 200 போனுல் போகின்றது'' என்ருள் மனைவி.

ஆகவே மகளே! இப்படியெல்லாம் உலகத்திலே ஏமாற்று வித்தைகள் நடைபெறுகின்றன'' என்று கூறினுள் செல்லம்மாள். தேன்மொழி கேட்டு, ''இந்த மாதிரியான செய்திகளைப் பலரிடம் சொல்லி வைத்தால் அவர்கள் ஏமாருமல் இருப்பார்கள். நாம் பல நூறு தருமம் செய்தால் திருப்தியாகவும் மகிழ்ச்சியாகவும் இருக் கின்றது. இப்படி ஏமாந்து போகின்றபொழுது நம் மனம் பல காலும் நமது அறியாமையை நினைந்து அல்லல் படுகின்றது—இனி நான் ஒரு போதும் ஏமாறமாட்டேன்'' என்ருள். நல்லம்மாளாகிய செல்லம்மாள் முருகனை நினைந்து தன் கடமைகளை செய்து கொண் டிருந்தாள்.

உ

முருகா



## சாந்தி பருவம்

### ஆபத் தருமம்

(மலர் 33—284 ஆம் பக்கத் தொடர்ச்சி)

தருமர் ''அறிஞரே! வலிமை குறைந்தவனும், குறைந்த சேனையுள்ளவனும், எளியவனுமான ஒருவன், அறிவின்மையால் வலிமையுள்ள பகைவனிடம் தற்புகழ்ச்சியுடன் பகைத்துக் கொண்டபின், அப்பகைவன் தன்னை அழிக்க வரும்போது எப்படி நடந்துகொள்ள வேண்டும்? இதை எனக்குக் கூறுவீராக'' என்று கேட்டார்.

### இலவமரம்

பீஷ்மர் ''பாரத! இதுபற்றி இலவமரம் ஒன்றின் வரலாற்றைக் கூறுகின்றேன். கேள்.

இமயமலைச் சாரலில் விண்ணளாவி வளர்ந்து ஓங்கிய ஒரு இலவ மரம் இருந்தது; பல ஆண்டுகளாக வளர்ந்த அம்மரத்தில் பல கிளைகளும் இலைகளும் மலர்களும் பழங்களும் செழிப்பாக இருந்தன. அதன் நிழலில் யானை முதலான விலங்குகள் தங்கி இளைப்பாறி வந்தன. நானூறு முழம் சுற்றளவுள்ள அத்தருவின் நுனியில் கிளிகளும் நாகணவாய்ப் பறவைகளும் சதா ஒலித்துக்கொண்டு சுகமே வாழ்ந்தன. அதன் குளிர்ந்த நிழலில் வழிப் போக்கர்களும் வர்த்தகர்களும் தவ முனிவர்களும் தங்கி மகிழ்வார்கள்.

### நாரதர்

நாரத முனிவர் அங்கு ஒரு சமயம் வந்தார். வளமையான இலவ மரத்தைக் கண்டு மகிழ்ந்து, அதனைப் பார்த்துக் கூறுவார்.

''மரங்களிற் சிறந்த இலவமே! நீ அழகாக வளர்ந்திருக்கின்றாய். கண்டோர் மனம் உன்னால் கவரப்படுகின்றது. எப்போதும் பறவைகளும் விலங்குகளும் உன்பால் அன்பால் தங்கி வாழ்கின்றன. காட்டில் உள்ள மற்ற மரங்கள் காற்றால் முறிந்து வீழ்வதைப் பார்க்கின்றேன். நீ மட்டும் காற்றால் முறிக்கப்படாமல் ஓங்கி வளர்ந்திருக்கின்றாயே? காரணம் யாது? வாயுதேவன் உன் நண்பனா? வாயுதேவன் குளங்களையும் நதிகளையும் வற்றச் செய்கின்றான். உன்னை மட்டும் அவன் ஒன்றும் செய்யாமல் விட்டு வைத்

திருக்கின்றான். உன் நிழல் தேவலோகம் போல் சுகமாக இருக்கின்றது. உன்னை அண்டிப் பல உயிர்கள் வாழ்கின்றன. மரங்களையும் மலைகளின் சிகரங்களையும் ஆட்டி அசைக்கின்ற வாயு உன்னை மட்டும் காப்பாற்றுவதற்குக் காரணம் என்ன? அவன் உனக்கு உறவா? நண்பனா?'' என்று கேட்டார்.

இலவமரம் ''நாரத முனிவரே! வாயு எனக்கு நண்பனும் அல்லன்; உறவும் அல்லன். என் வலிமைக்கு அவன் அஞ்சி என்பால் வருவதில்லை. என் வலிமையில் பதினெட்டில் ஒரு பங்குவலிமை கூட வாயுவுக்குக் கிடையாது, மரங்களையும் மலைகளையும் அடக்கும் வாயுவை நான் என் வலிமையால் அடக்குகின்றேன். அவன் பல முறை என்னால் பங்கப்பட்டிருக்கின்றான். அதனால் வாயுவுக்கு நான் அஞ்ச வேண்டிய அவசியம் இல்லை'' என்று கூறியது.

நாரதர் ''இலவமரமே! உன் தற்புகழ்ச்சியைக் கேட்டு நான் சிரிக்க வேண்டியிருக்கின்றது. உன் சொல்லும், நினைவும் தக்கன வல்ல. வாயுதேவன் எங்கே? நீ எங்கே? வாயுவுக்கு நிகரான வலிமையுள்ளவர் எவரும் எங்கும் இல்லை என்பது உறுதி. இந்திரனும் இயமனும் குபேரனும் வாயுவுக்கு நிகராகமாட்டார்கள். எல்லாவுயிர்களும் வாயுவின் உதவியால் வாழ்கின்றன. நீ வாயுவை இகழ்கின்றனை. இது மடமை. சந்தனம் தேவதாரு முதலிய உயர்ந்த வலிமையுள்ள மரங்கள்கூட வாயுவை இகழ்வதில்லை. குறைந்த வலிமையுள்ள நீ வீண் பெருமை பேசுகின்றாய். நீ வாயுவின் வலிமையை அறியவில்லை போலும். தக்கவனை இகழ்கின்ற உன் சொல் என் மனத்தைப் புண்ணாக்கியது. உன் நிந்தனைச் சொற்களை வாயுவிடம் கூறுவேன்'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

நாரதர் வாயுதேவனிடம் போய்க் கூறுவாராயினார். ''வாயுவே! இமயமலைச் சாரலில் ஒரு பெரிய இலவமரம் இருக்கின்றது. பல நிந்தனைச் சொற்களைக் கூறியது. அவைகளை நான் உன்னிடம் கூற விரும்பவில்லை. நீ மேலானவன்; உன் வலிமை வரம்பில்லாதது. உலகங்கட்கு நீ தலைவன் என்று நான் அறிவேன்'' என்றார். இதைக் கேட்டு வாயுதேவன் சீற்றங் கொண்டான்.

வாயுதேவன் இலவமரத்தினிடம் போய், ''இலவமரமே! நாரதரிடம் என்னை நீ இகழ்ந்தனையாம். உன்னை நான் நன்கு அறிவேன். பிரமதேவர் உன் நிழலில் ஒரு சமயம் இளைப்பாறினார். அதனால் நான் உன்னைக் காப்பாற்றி வந்தேன். தற்பெருமை பேசிய உன்னை இனி விட்டு வைக்க மாட்டேன். உன்னிடம் என் ஆற்றலைக் காட்டப் போகின்றேன்'' என்றான்.

இலவமரம் ''வாயுதேவனே! உனக்கு நான் அஞ்சமாட்டேன். உன் சினம் என்னை ஒன்றும் செய்யமாட்டாது. உன்னிலும் நான் வலிமையானவன். நீ வீண் கோபங் கொள்ளாதே. உன் சீற்றத்தை

மற்ற இடத்தில் காட்டிக் கொள். உன் கோபம் என்னிடம் செல்லாது'' என்று ஏளனமாகக் கூறியது. வாயு, ''இலவமே! நாளைக்கு உன்னிடம் என் வலிமையைக் காட்டுவேன்'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

இலவமரம் தனக்குள் சிந்தித்தது. ''நாரதரிடம் நான் கூறியது பிழை. அது பொய்மையுமாகும். வாயுவுக்கு நான் நிகராக மாட்டேன். நான் மற்றைய மரங்களிலும் குறைந்த வலிமையுள்ளவன். ஆனால் அறிவு எனக்கு இருக்கிறது. வாயுவினால் எனக்கு வரும் அவமானத்தை நான் விலக்கிக்கொள்வேன்'' என்று எண்ணிய இலவமரம் தன் கிளைகளையும் இலைகளையும் தழைகளையுந் தானாகவே கீழே தள்ளிக்கொண்டது.

மறுநாள் காலை பெருமூச்செறிந்து கொண்டு கோபத்துடன் வாயு பகவான் காட்டிலுள்ள பெரிய மரங்களை ஒடித்துக்கொண்டு இலவமரத்தினிடம் வந்தான். வெறும் கொப்புடன் நிற்கும் இலவ மரத்தைக் கண்டு சிரித்தான்.

''ஓ இலவமரமே! நீயே உன் கிளைகளை முறித்துக் கொண்டாய். உன் வாய்க்கொழுப்பால் நீ அழிந்தனை. வீண் கர்வங் கூடாது.'' என்று கூறிவிட்டுச் சென்றான். இலவமரம் நாணத்தையடைந்து நாரதரது நல்லுரையை நினைந்து வருந்தியது.

தருமா! இலவமரம்போல் மூடன் வலிமையாளனைப் பகைத்து வருத்தமடைவான். ஆதலால் பலங் குறைந்தவன் பலம் நிறைந்தவனைப் பகைக்கக் கூடாது. அப்படிப் பகைத்துக் கொண்டவன் இலவமரம்போல் துயரமடைவான். வீண் பெருமை பேசக் கூடாது. வல்லமையாளனை இகழ்தல் கூடாது. பாரத! பதினெட்டு அக்ஷௌஹிணிகளும் அர்ச்சுனனால் தீயில் பஞ்சுபோல் அழிந்தன. அரச தருமங்களும் ஆபத்கால தருமங்களும் விரிவாக உனக்கு உபதேசிக்கப்பட்டன. இன்னும் நான் எதை உனக்கு உபதேசிக்கவேண்டும்?'' என்று வினவினார்.

## உலோபத்தின் இழிவு

தருமர் ''பிதாமகரே! பாவத்துக்கு இருப்பிடம் எது? எதனால் பாவம் விளைகின்றது? இதை எனக்குச் சொல்லும்'' என்று கேட்டார்.

பீஷ்மர் ''அரசனே! உலோபம் என்ற ஒன்றுதான் பாவங்களுக்கு இருப்பிடம். அது பெரிய முதலை போன்றது. உலோபத்திலிருந்து பாவம் சினம் பொறாமை அதர்மம் முதலிய பல தீக்குணங்கள் விளைகின்றன. உலோப குணமுள்ளவன் எப்போதும் திருப்தியில்லாமலே வாழ்வான். ஆதலால் உலோபமுள்ளவன் இம்மை மறுமையென்ற இரு நலன்களையும் இழப்பான்'' என்றார்.

தருமர் "பெருமானே! அறியாமை என்றால் என்ன?" என்று வினவினார்.

## அறியாமை

"பாரத! உண்மையை அறியாத குணம் அறியாமையெனப் படும். அறியாமை இருள் போன்றது. அது நரகத்தைத் தரும். அறியாமையும் அதிலோபமும் பெருங் கேட்டைத் தருவன. அறி யாமையால் அழிந்தவர்கள் பலர். துன்பத்தை இன்பமாகவும் இன்பத்தைத் துன்பமாகவும் மாறியறிவது அறியாமை."

"பிதாமகரே! அறத்தை விரும்பும் அந்தணனுக்கு எந்த குணம் சிறப்பாக இருக்கவேண்டும்" என்று தருமர் கேட்டார்.

## தமம்

"அன்புள்ள அறக் கடவுளின் மகனே! அமுதத்துக்கு ஒப்பான இதை உனக்கு உரைக்கின்றேன்: கேள்" என்று காங்கேயர் கூறு கின்றார். "உய்வுபெற வேண்டும் ஒருவனுக்கு முக்கியமான குணம் *தமம் எனப்படும். தமம் முத்திக்குக் காரணமாகும். தமம் வேதம் ஓதுதல் தவம் வேள்வி முதலிய எல்லாவற்றுக்கும் மேலானது. தமத்துக்கு நிகரான வேறு தருமம் இல்லை. எப்போதும் தமத்துடன் இருப்பவன் இருக்கும்போது சுகம் பெறுகின்றான். இறந்த பின்னும் சுகம் அடைவான். தமம் உள்ளவன் சுகமாக உறங்குவான். சுகமாக விழித்துக் கொள்ளுவான். எங்கும் சுகமாக உலாவுவான். அவன் மனம் தெளிவாக இருக்கும். தமம் இல்லாதவன் அடிக்கடி துக் கத்தையடைவான்.

தமம் உள்ளவன் தற்புகழ்ச்சி செய்து கொள்ள மாட் டான். கோபம் தாபம் லோபம் முதலியவைகளை யடையமாட் டான். தமம் உள்ளவன் காட்டிலிருந்தாலும் நாட்டிலிருந்தாலும் ஒன்றுதான். மீன் போன வழியும் வானத்தில் பறவை பறந்த வழியும் காணப்படாததுபோல் தமமுள்ளவன் செல்லும் வழியும் காணப்படமாட்டாது.

தருமா! தவம் என்ற ஒன்றையும் கூறுகின்றேன்: கேள். தவத்தைச் செய்தவன் சிவத்தையடைவான். தவம்புரிவோன் எல்லா நலங்களையும் எளிதிற் பெறுவான். தவம் புரிவோரால் உலகம் நிலை பெறுகின்றது.

சத்தியமே நித்தியம். அதனையன்றி மற்றவெல்லாம் அநித் தியம். சத்தியத்தை எல்லோரும் உறுதியாகக் கடைப்பிடிக்க வேண்டும்" என்றார்.

---

* தமம்—இந்திரியங்களின் அடக்கம்.

நகுலன் பீஷ்மரை வணங்கி, "பிதாமகரே! கத்தி பிறந்த வரலாற்றைக் கூறியருளும்" என்று கேட்டான்.

## கத்தியின் வரலாறு

பீஷ்மர், "கத்திச் சண்டையில் சமர்த்தனுன நகுலனே! எல்லா ஆயுதங்களிலும் கத்தி சிறந்தது. வில்லும் அம்பும் அழிந்தாலும் கத்தியால் போர் புரிந்து அரசன் வெற்றி பெறுவான்.

பிரமதேவர் உலகங்களையெல்லாம் படைத்தருளினுர். நெடுங் காலத்துக்குப்பின் அசுரர்களின் கொடுமை எங்கும் தலைவிரித்து ஆடியது. அப்போது பிரமதேவர் ஒரு வேள்வியைச் செய்தார். அதில் அளவற்ற ஆற்றலுடன் ஒரு பூதம் தோன்றியது. அப்போது விண்ணும் மண்ணும் நடுங்கின; கடல் கலங்கியது. எரி கொள்ளிகள் விழுந்தன. திசைகள் மயங்கின; புயல் அடித்தது. உயிர்கள் நடுங்கின.

பிரமதேவர் தேவர்களையும் கந்தர்வர்களையும் பார்த்து "நீங்கள் அஞ்சவேண்டாம். இதன் பேர் கத்தி. உங்கள் நலத்துக்காகவும் அசுர வதத்தின் பொருட்டும் இதனையுண்டாக்கினேன்" என்றுர். உடனே அந்தப் பூதம் கத்தியின் உருவமாக ஆயிற்று. கூர்மையுள்ள அந்தக் கத்தியே உருத்திரமூர்த்தியிடம் சென்றது. உருத்திரர் கத்தியைக் கரத்தில் ஏந்தி விண்ணில் எங்கும் உலாவினுர். அசுரர்கள் குலத்தை அழித்தருளினுர். மண் முழுவதும் உதிரச் சேருகியது.

உருத்திரர் கத்தியைத் திருமாலிடம் தந்தருளினுர். திருமால் மரீசியிடம் கொடுத்தார். மரீசி சுக்கிரரிடம் கொடுத்தார். சுக்கிரர் முனிவர்களிடம் கொடுத்தார். முனிவர்கள் இந்திரனிடம் தந்தார்கள். இந்திரன் உலகபாலகர்களிடம் கொடுத்தான். உலகபாலகர்கள் மனுவிடம் வழங்கினுர்கள்.

மனு தன் மகனுகிய க்ஷுபனிடம் உலக ரட்சணையை வேண்டித் தந்தார். க்ஷுபனிடமிருந்து இட்சுவாகுவும், அவனிடமிருந்து புரூரவசும், அவனிடமிருந்து ஆயுவும், அவனிடமிருந்து நகுஷனும், நகுஷனிடமிருந்து யயாதியும், யயாதியிடமிருந்து பூருவும், பூருவிடமிருந்து, ஆதூர்த்தனும், ஆதூர்த்தனிடமிருந்து சுயனும், சுயனிடமிருந்து பூமிசயனும், பூமி சயனிடமிருந்து துஷ்யந்தன் குமாரனுன பரதனும், பரதனிடமிருந்து ஜலபிலனும், ஜலபிலனிடமிருந்து துந்து மாரனும், அவனிடமிருந்து முசுகுந்தனும், முசுகுந்தனிடமிருந்து மருத்தனும், மருத்தனிடமிருந்து ரைவதனும், ரைவதனிடமிருந்து யுவனுச்வனும், அவனிடமிருந்து ரகுவும், ரகுவிடமிருந்து ஹரிணுச்வனும், அவனிடமிருந்து சுனகனும், சுனகனிடமிருந்து உசீனரனும், உசீனரனிடமிருந்து போஜர்களும் யதுக்களும் பெற்றுக் கொண்டார்கள். யதுக்களிடமிருந்து சிபியும்,

# ஜய ராம

உலகிலுள்ள மக்கள் பலப்பல திறத்தினர். ஒருவர் உள்ளம் போல் மற்றொருவர் உள்ளம் அமைவதில்லை; எண்ணங்களில் மாறுதல்; கொள்கைகளில் மாறுதல். வழிபாட்டு முறைகளில் மாறுதல்; நெறிகளில் மாறுதல் செயல்களில் மாறுதல். இப்படிப் பல மாறுதல்கள் உடையதாக உலகம் விளங்குகின்றது. பலவேறு சமயங்கள் மதங்கள் உடைய மனிதர்கள் எல்லோரும் ஒன்றில் மட்டும் மாறுதல் இன்றி ஒன்றுபடுகின்றார்கள். அது எது?

ஜயம் வேண்டும் என்ற எண்ணத்தில் யாருக்கும் மாறுபாடு கிடையாது. எண்ணங்களிலும் முயற்சிகளிலும், செயல்களிலும் வெற்றி பெற வேண்டும் என்றே எந்நாட்டவரும், எக்கட்சியினரும் கருதுகின்றார்கள்.

ஆனால் பலர் தோல்வியே அடைகின்றார்கள். இதற்கு என்ன காரணம்? காம்பில்லாத அகப்பை பாயசத்தை முகக்

---

சிபியிடமிருந்து பிரதர்த்தனும், பிரதர்த்தனிடமிருந்து அஷ்டகனும், அஷ்டகனிடமிருந்து ருசதச்வனும், ருசதச்வரிடமிருந்து பரத்வாஜரும், அவரிடமிருந்து துரோணரும், துரோணரிடமிருந்து கிருபரும் கத்தியைப் பெற்றுக் கொண்டார்கள். கிருபரிடமிருந்ததை நகுலனே! நீ பெற்றுக்கொண்டாய்.

கத்திக்கு எட்டு பேர்கள் உண்டு.

அஸி, விசஸனம், கட்கம், தீக்ஷ்ணசர்மா, துராஸதம், ஸ்ரீகர்ப்பம், விஜயம், தர்மபாலம் என்பன. கத்திதான் எல்லா ஆயுதங்களுக்கும் முதலில் உண்டானது. அதற்குப் பின் பிருது சக்கரவர்த்தி வில்லையுண்டாக்கினன். கத்திக்கு எப்போதும் பூஜை செய்யவேண்டும். அதனால் வெற்றியுண்டாகும்.

பிறகு அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு உறுதிப் பொருள்களில் எது சிறந்தது என்று தம்பியர்களைப் பார்த்து தருமர் கேட்டார். விதுரர் அறம் பெரிது என்றார். அர்ச்சுனன் பொருளே சிறந்தது என்றான். பொருள் இன்றி ஒரு கருமம் நடைபெறாது என்றும் கூறினன். பீமன் இன்பமே பெரிது என்றான். முடிவில் தருமர் வீடு என்பதுதான் சிறந்தது என்றார். (தொடரும்)

காது: "காம்பிலா மூழைபோலக் கருதிற்றே முகக்கமாட்டேன்" என்கிறார் அப்பர் பெருமான்.

மனித அறிவும் மனித முயற்சியும் அகப்பை போன்றது; தெய்வத் திருவருள் அகப்பையின் காம்பு போன்றது

ஜெயத்தின் சிகரமாகத் தோல்வியே யறியாத அவதாரம் இராமாவதாரம். கண்ணபிரான் ஜராசந்தனிடம் 18 முறை தோல்வியுற்றார் என்று வரலாறு கூறுகின்றது. இராமாவதாரத்தில் தோல்வியென்பது மருந்துக்கும் இல்லை. ஒரே கணையினால் பகைவரைக் கொல்லும் ஆற்றல் ஸ்ரீராமரிடம் அமைந்திருந்தது. அதற்குக் காரணம் அவரிடம் அமைந்திருந்த சத்தியமும் ஒழுக்கமுமே யாகும்.

இதனால் தியாகையர், "ஒகமாட ஒகபாண ஒகபத்னி வ்ருதுடு" என்கின்றார்.

இராகவனுடைய கணை குறிதவறியது கிடையாது. "குறிக்குத் தக்கியது ராமசரம்" என்ற பழமொழியுண்டு. இது உலக வழக்கில் "குருவிக்குத் தக்கது ராமேசுரம்" என்று மருவி வந்து விட்டது.

ராமபாணம் போல் பேசுகின்றான் என்று மக்கள் பேச்சில் ராமபாணத்தின் சிறப்பு பேசப்படுகின்றது.

"ஸ்ரீ ராமஜெயம்" என்று எழுத்து வழக்கிலும் எழுதப் பெறுகின்றது. அகப்பகை, புறப்பகை என்ற இருபகைகளையும் வெல்ல நினைப்பவர்கள் ஜெய ஜெய ராம என்று பாராயணம் புரிதல் வேண்டும்.

ராம என்ற மந்திரத்துக்குப் பல பொருள்கள் உண்டு.

மரா என்ற சொல் ராம என்று எழுத்து மாறி வந்தது.

ஹிம்ஸ என்ற சொல் ஸிம்ஹ என்று வந்தது போலவும், வசி என்ற சொல் சிவ என்று வந்ததுபோலவும், மரா என்ற சொல் ராம என்று வந்தது என அறிக.

மரா—போக்கடிப்பது. பாவத்தைப் போக்குவது ராம என்ற மந்திரம்.

ரமா—லட்சுமி. லட்சுமி சம்பத்தை வழங்குவது ராம என்ற மந்திரம்.

ரம்ய—மகிழ்ச்சி. மகிழ்ச்சியைத்தருவது ராம என்ற மந்திரம்.

"அண்ணநுனிநா வருட ரழ வரும்"

என்ற இலக்கண சூத்திரப்படி பாவத்தை வெளிப் படுத்துவது. ரா—என்ற எழுத்து.

ம—என்ற எழுத்து,

"மீகீ ழிதழுறப் பம்மப்பிறக்கும்"

என்ற இலக்கண சூத்திரப்படி வெளிப்பட்ட பாவம் மீண்டும் வந்து நுழையாதவாறு இரு இதழ்களும் சேர்ந்து கபாட பந்தனம் புரிவதுபோல் தடுக்கும்.

எனவே பாவத்தைப் போக்கித் திரும்ப வரவொட்டாமல் தடுக்கவல்ல மந்திரம் ராம.

தமிழ் முறைப்படி இராமன் என்று வரும்.

இந்த முறைப்படி பார்த்தால் இரா—இரவு, மன்—தலைவன். இரவுக்கு அரசன்—சந்திரன். சந்திரனைப்போல் குளிர்ந்து அடியாருக்கு அருள் புரியும் தெய்வம் இராமன்.

இரா—இல்லை. மன்—தலைவன். இது போன்ற கருணையுடைய தலைவன் இதுவரை யில்லை என்றும் பொருள்படும்.

பறவைக்கும் குரங்குகட்கும் அருள்புரிந்த கருணைக் கடவுள் இராமர்.

மனைவியைத் தீண்டிய காகத்துக்கும் அருள்புரிந்த கருணா மூர்த்தி இராமர்.

"காது மொருவிழி காகமுற அருள் மாயன் அரிதிரு மருகோனே"

என்கின்றார் அருணகிரிநாதர்.

கடல் அணை புதுக்கியபோது மணலை உதிர்த்த அணிலுக்கும் அருள்புரிந்த தெய்வம் இராமச்சந்திர மூர்த்தி.

அவருடைய பாதத் துகள் பாபம், சாபம் என்ற இரண்டையும் ஒருகணத்தில் போக்க வல்லது என்றால் அவருடைய திருவடிக்கு எத்துணை பெருமையுண்டு என்பதை உய்த்துணர்க.

"கோதமன்றன் பன்னிக்கு முன்னையுருக் கொடுத்ததிவன்
போதுநின்ற தெனப்பொலிந்த பொலன்கழற்கால் பொடிகண்டாய்"

என்று அருந்தவ அரசராம் விசுவாமித்திரர் வியந்து கூறுகின்றார்.

உ

முருகா

# சோமசுந்தரப் பதிகம்

(ஆசிரியர்)

---

## காப்பு

### நேரிசை வெண்பா

1. பாரதந் தத்தால் பனிவரையில் பாரதனில்
பாரதந் தீட்டும் பரமனே - வீர
மதுரா புரிவாழும் வாரணமு கத்தோய்
அதிரவருந் துன்பை யகற்று.

## நூல்

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

2. அகர வுயிர்போல் அனைத்துலகுக் காதியான அருமருந்தே
நிகரில் வெள்ளி யம்பலத்தில் நிருத்தம் புரியும் நின்மலனே
புகர்சேர் ஈனர் புரியுமிடர் போக்கிப் புனிதப் பதமருள்வாய்
குகனுர் போற்றுங் கூடலுறை குறைவில் சோம சுந்தரனே.

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

அன்றி மனைவியைக் கவர்ந்த மாபாதகனும் இராவணன் முதல் நாள் போரில் வில்லிழந்து, இராவணேச்சுரன் என்ற சொல்லிழந்து, நடையிழந்து சதுரங்கப் படையிழந்து, தேரிழந்து, வீரன் என்ற பேரிழந்து, தரையில் நின்றபோது, "இன்று போய் போர்க்கு நாளை வா" என்று கூறி, பரம சத்துருவுக்குங் கருணை காட்டிய கருணைநிதி இராமர்.

ஆதலால் காதலால் "ராம ராம ஜய; ராமராமஜய ஸ்ரீ ராம ஜயராம, ஜயஜயராம, ஜயராம ராம" என்று பாராயணம் புரிவோர், வாழ்வில் ஜயத்தைப் பெறுவர் என்பது ஒருதலை. அகமும் புறமும் தூய்மையுடன் இம் மந்திரத்தை உச்சரித்தோர் இகம்பரம் இரண்டையும் பெற்று இன்புறுவார்கள்.

"மும்மைசால் உலகுக்கெல்லாம் மூலமந்திரத்தை முற்றுந்
தம்மையே தமக்கு நல்குந் தனிப் பெரும்பதத்தைத் தானே
இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தினை இராமன் என்னும்
செம்மைசேர் நாமந்தன்னைக் கண்களில் தெரியக்கண்டான்.

3. ஆதி யந்தம் நடுவில்லா அநாதி மூலத் தாண்டவனே!
மாதின் துயர்கண் டக்கணத்தில் மாம ஞக வந்தவனே!
ஏதி லார்செய் இடர்களையாய் எந்தாய் சிந்தை
நொந்தயர்ந்தேன்
கோதி லாத குணக்குன்றே கூடல் சோம சுந்தரனே.

4. இழிக்கும் பழிக்கஞ் சியவேந்தற் கிரங்கிக் கருணை புரிந்தவரே
கழிக்கும் தீயோர் தினம்புரியுந் துன்பங் களைந்தே இன்பமருள்
கொழிக்கும் கருணை யங்கயற்கண் கொடிசேர் பவளக்
குணக்குன்றே
செழிக்குங் கூடல் சிவக்கொழுந்தே தேவே சோம சுந்தரனே.

5. ஈனப் பன்றிக் குருளைகளுக் கிரங்கி முலைப்பால் ஈந்தவனே
ஞானப் புனித நாயகனே நன்றி யறியா நஞ்சனையார்
ஊனம் புரியப் பார்த்திருப்ப துனது கருணைக் கழகாமோ
தானந் தவமும் மதுரையுறை தரும சோம சுந்தரனே.

6. உன்னை யொழிய ஒருவரையும் ஒருபோ தேனும்
மதித்தறியேன்
என்னை ஈனர் இடர்புரிவ தெல்லா மறிந்தாய் அறியாயோ
முன்னை வினையோ? முக்கண்ணு! முனியா தினிநீ யருள்புரிவாய்
அன்னை யனையாய் திருக்கூடல் அரசே சோம சுந்தரனே.

7. ஊமைச் சிறுவன் தனைக்கொண்டே உற்ற கலைஞர்
கலாந்தீர்த்தோய்
ஆமைந் தெழுத்தின் உட்பொருளே! அவலர் புரியும்
இடர்களையாய்
ஆமை போல ஐந்தடக்கும் அரியதவத்தோர் அகத்துறையும்
ஓமைம் பொருளே ஒண்கூடல் உரிய சோம சுந்தரனே.

8. எண்ணற் கரிய கருணையினுல் இசைவல் லோன்முன்
விறகாளாய்
பண்ணின் யாழை மீட்டியவன் பயந்தே யோட அருள்புரிந்த
வண்ணம் எலும்பை யுருக்குமரோ மதியிலார் செய்
துயர்களையாய்
அண்ணல்! ஆல வாயுறையும் அதிப! சோம சுந்தரனே.

9. ஏது மில்லாத் தருமிதனக் கிரும்பொன் கிழியை ஈந்தவனே!
வாது மிகுந்த வஞ்சனையோர் வகுத்த மாய மருள்களைவாய்
தீதும் நன்றும் நின்செயலே சேயேன் நாயேன்
திகைக்கின்றேன்
ஓதும் வேத ஒலிக்கூடல் உறையும் சோம சுந்தரனே.

10. ஐய நினையே சரணடைந்தேன் அறியேன் சிறியேன் அகங்
குலையப்
பொய்யர் புரியும் புன்மைதனைப் போக்கி நன்மை யாக்கியருள்
செய்ய பவளத் திருமேனித் தேவே! தேவர் குழாம் போற்ற
வெய்ய நஞ்சுண் டருள்கூடல் விமலா! சோம சுந்தரனே.

11. ஒருமை நெறியைக் கடைப்பிடித்த ஒருவன் சிறுவன்
அடியேனுன்
பெருமை யறியுந் தரத்தினனோ? பிணங்குங் கீரற் கருள்புரிந்த
அருமை யுடைய அருட் கடலே! அறிவிலார்செய் இடர்
களையாய்
இருமை நலனும் அருள்கூடல் இறையே சோம சுந்தரனே!

## வாழி

## நேரிசை வெண்பா

ஓதும் மறையொலிசேர் ஒண்மதுரை யூர்வாழி
மாதுமீ னாட்சியுமை மான்வாழி - போதுறையும்
சொக்கலிங் கம்வாழி தூய தமிழ்வாழி
தக்கநெறி வாழி தழைத்து.

## அறிவிப்பு

காஞ்சிபுரம், மெய்கண்டார் கழகத்தார் ஆண்டுதோறும் வெளியிட்டு வரும் அறுபத்து மூன்று நாயன்மாராதியர் திருநட்சத்திரப் படம் வெளிவந்துவிட்டது. வேண்டுவோர் இருபது காசு (0-20) தபால் தலைகள், கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பி இரண்டு முதல் நான்கு படங்கள் வரை பெற்றுக்கொள்ளலாம். விபரமாக முகவரிகள் எழுதி அனுப்பவும்.

வீ. திருஞானசம்பந்த முதலியார்,
செயலாளர் : மெய்கண்டார் கழகம்.
32, மண்டபத் தெரு, காஞ்சிபுரம்.

## கோடி அர்ச்சனை

திருச்சிராப்பள்ளி குமாரவயலூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்குக் கோடி அர்ச்சனை தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டு வருகிறது. அன்பர்கள் பின்வரும் விலாசத்துக்குப் பணம் அனுப்பி வைத்துக் கோடி அர்ச்சனையில் பங்கு பெறலாம். சஹஸ்ர நாம அர்ச்சனை ஒன்றுக்கு ரூ. 1-00.

பொக்கிஷதார், கோடி அர்ச்சனைக் கமிட்டி,
25, பஞ்சவர்ண சுவாமி கோயில் தெரு,
உறையூர், திருச்சி-3.

---